






உ

சிவமயம்

# சிவஞான போதசாரம்

சிவஞான போத மூலம், பதவுரை

சிவானந்தக் குறிப்புடன் கூடியது




வேதமொழிப்பேராசிரியர்

**காசிவாசி. சிவானந்தயதீந்திர சுவாமிகள்**

இயற்றியது.



வட ஆற்காடு கூட்டுறவுத் துறைத்தலைவர், திருவாளர்

**கி. நாராயணசாமி முதலியார்**

அவர்களால்




29—12—37 வேலூரில் துவங்கிய

சைவ சித்தாந்த சமாஜத்தின் 32-ம் ஆண்டு விழாவில்

வழங்குதற்கெனப் பதிப்பிக்கப் பெற்றது.


குமரன் பிரஸ், காஞ்சீபுரம்.

1937

# புனைந்துரை

உண்மை ஞானம் பெற விரும்புவோர் படித்தற்குரிய நூல்களிலே முதன்மையானது சிவஞான போதமாம். சைவர்களும், சைவ சமயத்தைப் பாராட்டுபவர்களுமே யல்லாமல், அறிவு வேட்கையுடைய பலரும் போற்றி ஆராயற்பால அரிய நூல் அஃதாகும். அவ்வளவு உயரிய நூலாக, யாவரும கற்றற்கான பனுவலாக, இருந்தும், அஃது எல்லோராலும் படிக்கப்பெறுகின்றதா என்றால், 'ஆம்' என்னும் விடை கிடைக்காது. நூற்றுக்கு ஒருவர், வேண்டாம், ஆயிரத்துக்கு ஒருவர், அவ்வளவும் தேவையில்லை, பதினாயிரத்துக்கு ஒருவராவது இம் மாபெருநூலின் பெயரையாவது தெரிந்திருப்பாரா என்றால், அதற்காவது 'ஆம்' என்னும் விடை வருமா? ஐயந்தான! ஏன் அப்படி? மக்களது தமிழறிவின் தாழ்மை! அவ்வளவேயா? நூலின், எளிதில் அறியவொண்ணு, இயல்பு.

சிவஞான போதச் சூத்திரங்களே மேல். அவற்றையே படித்தாலும் ஒருவாறு பொருள் தெரிந்து கொள்ளலாம். ஆனால் அவற்றிற்கு இதுவரை எழுதப் பெற்றிருக்கும் உரைகளைத் தட்டுத் தடங்கல் இல்லாமல் பார்த்துப் படிக்கக் கூட இக்காலத்துத் தமிழனால் இயலாது. தமிழ் அறிவு குறைந்திருக்கும் இக்காலத்தில் எப்படி அவ்வுரைகள் பொது மக்களுக்குப் பயனளிக்கும்? உரையினைக் கல்லாமல் நூலின் உட்கருத்தை எவ்வாறு தெளிந்து கொள்ளுதல் கூடும்?

எனவே, இந்நாளைக்கு ஏற்ற எளிதான உரைகள் பல, இந்நூலுக்கும், இதுபோன்று மக்களுக்கு உண்மையறிவை விளக்கவல்ல பிறபல நூல்கட்கும், பெரிதும் தேவையாகும். அத்தேவையினை யறிந்து உரையியற்றும் ஆற்றல் மிக மிகச் சிலருக்கே உண்டு. ஒரு புறம், எத்தகைய கடுமையான இலக்கிய இலக்கண நூல்களையே யல்லாமல், உள்ளத்தைக் கலக்கக் கூடிய தத்துவப் பொருள்களையும் உளங்கொளப் பயின்று தெளியும் ஆற்றல் வேண்டும். மற்றொரு புறம், அவ்வாறு பயின்று தெளிந்த பொருளை மிகக் குறைந்த

மொழியறிவுடையவரும் எளிதில் விளங்கிக் கொள்ளுகின்ற வகையிலே எழுதும் போற்றலும் வேண்டும். இரண்டும் ஒருவரிடத்தே ஒருங்கே அமைவது கடினம். இக்குறையே இத்தகைய அரும்பெரு நூல்கட்கு இக்காலத்திற்கு ஏற்ற உரைகள் விரைவில் வெளிவராமைக்கு முதற்காரணமாகும்.

இங்ஙிலையிலே, தென்மொழியையேயன்றி வடமொழியையும் துறைபோகக்கற்று ஆராய்ந்தவரும், அவற்றில் போந்த பொருளைத் தெள்ளத்தெளிய எடுத்து விளக்குவதிலே கைபோய ஆற்றல் படைத்தவரும், சென்னைப் பெருவள்ளலும் பேரறிஞருமாய பெருந்திருவாளர்: திருவொற்றியூரான் அடிமை, டி. பி. இராமசாமிப் பிள்ளையவர்களால், தமிழ்த் தொண்டாற்றுதற்கெனச், சிறப்பாகப் போற்றப் பெறுபவரும், இக்காலத்து மக்கள் வடமொழி வேதங்களையும் எளிதிலே தெரிந்து கொள்ளும்படித் தமிழில் வரைந்து உதவியுள்ளவருமான துறவறத் தூய்மையார்: காசிவாசி சிவானந்த யதீந்திர சுவாமிகள் அவர்கள் தமிழ் நாடு செய்த தவப்பயனுய்த் தோன்றியிருப்பது தமிழர் ஒவ்வொருவர்க்கும் தனிப்பெரு மகிழ்ச்சியை விளைவிக்கின்றது. இப் பெருந்தகையார் சிவஞான போதத்திற்கு மிகத்தெளிவான பதவுரையும், அரிய பொருள்களைத் தெரிய விளக்கும் சிவானந்தக் குறிப்பும் வரைந்து உதவியதற்குத் தமிழுலகம் என்றும் கடமைப்பட்டதாகின்றது.

இதனைச் சைவசித்தாந்த மகாசமாஜத்தின் 32-ம் ஆண்டு விழாவின்போது வழங்குதற்கென, அச்சிடுவித்த, வேலூர் கூட்டுறவுத்துறை ஜில்லா அதிகாரி, பெருந் திருவாளர்: கீ. நாராயணசாமி முதலியார் அவர்கட்கும் தமிழ் நாட்டின் நன்றி பல உரியதாகும்.

சைதாப்பேட்டை<br>17—12—37

கீ. இராமலிங்கன்,<br>முனிசிபல் கமிஷனர், சைதாப்பேட்டை.

உ
சிவமயம்

# முன்னுரை

வேதம் பசுஅதன்பால் மெய்யா கமம்நால்வர்
ஓதுந் தமிழ்அதனின் உள்ளுறுநெய்—போதமிகும்
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெ மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

என்பது ஆன்றோரின் அருமையுரை.

ஈண்டு, பல்வேறு வகைப்பட்ட மொழிகளும் மதங்களும் பெரியோர்களால் வகுக்கப்பட்டிருக்கின்றன. இதை உய்த்து நோக்கின் இறைவன் செயலென்றே தெளிவாய்க் கூறலாம். முழுமுதற் கடவுளின் திருவருளுணக்கின்றி யாண்டும் எவ்வகையான அறிவிச்சை செயல்கள் யாவர்க்கு நிகழ்வனவாம் என்பது அமையாமையினென்க. இவைகட்குக் கால பேதத்தால் தோல்வி வெற்றிகள் உண்டு.

இதுபற்றியன்றே

தோல்வியும் வெற்றியுஞ் சொன்மதங் கட்கெலாங்
காலபே தத்தினுண் டுந்திபற
கருத்தன் செயலதென் றுந்திபற.

என்றார் பெரியாரும். இங்கு யாம் பிறமொழிகளைப்பற்றியேனும் பிறமதங்களைப்பற்றி யேனும் புகழ்தலும் பழித்தலும் செய்யேம். ஆனால், ஒன்று மாத்திரம் யாம் வற்புறுத்திச் சொல்வதற்கு இடமுண்டு, அஃதென்னையோ வெனின்? யாண்டும் எவர்க்கும் எவ்வாற்றானும், இனிமையாயுள்ளது தண்டமிழே யென்பதும், இன்பம் பயப்பது சிவஞான போத மென்னும் இத்தமிழ் நூல் ஒன்றே என்பதுமாம். ஈண்டு, தமிழுக்கும் சிவத்திற்கும் இயற்கையாகிய சொற்பொருளியைபு அறியக் கிடந்தமையை, எடுத்துக் கூறும் நிகண்டும்,

"தமிழ் சிவம் இனிமையாகும்" என்பதனு னுணர்ந்து கொள்க. மற்றும், தமிழ் என்பது ஐந்தலகையுடைமையின் சிவானந்தத்தை யளிக்குமியற்கைத்தாம் என்று இராமலிங்க சுவாமிகள் விரித்துரைத்தருளிய அருண் மொழியாலும் இனிது விளங்கும்.

இஃதன்றியும், சைவசித்தாந்தத் தனிப்பெருந் திருமறைகளும், இச்சிவஞான போதச் சூத்திர முதலானவைகளும் தமிழ்மொழிக்கு உரித்தாகிய பன்னிரு உயிரெழுத்துக்களின் செவ்வெண் கொண்டவைகளாய் விளங்குவதையும் உற்று நோக்குக. இதனுல், பன்னிரு உயிர்களாகிய கலைகளையுடைய இரவி போன்ற தாய்ப்பிதா மொழி யென்பது தமிழே யெனல் உறுதிப்பட்டவாருயிற்று.

இங்ஙனமிருப்பதுடன், இச்சிவஞான போத நூலைத் திருவாய் மலர்ந்தருளியவரின் திருப்பெயரோ, மெய்கண்டார், என்னும் பிறர்க்கியையாப் பெரும் பெயராம். என்னை? மறை, மறைமுடிவு, ஆகமம் மற்று பலஉண்மை நூல்களின் உட்கிடையாகிய அத்துவிதத்தின் உண்மையை திருவருளால் மெய்யாயுணர்ந்த மேம்பாடுடையா ராதலின் என்க. ஈண்டு,

"அத்துவித மெய்கண்டான் அந்நந்தி சம்பந்தன்
முத்தியளி கொற்றவனு முந்திலரேல்—இத்தலத்தில்
அத்துவித மெங்கேநல் லாகமமெங் கேமதப்பொய்
கொததுவித முத்தியெங் கோ"

என்னும் உண்மை வாக்கைநினைந்து கொள்க.

அற்ருகவினன்றே நமது தாயுமானத் தண்ணளியாரும்,

"பொய்கண்டார் காணுப் புநிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ"

என்று இரங்கிக் கூறியருளியதூஉம் என்க.

மற்றும், இச்சிவஞான போதநூல் வந்த வரலாற்றை நோக்கிலோ, இவற்றினும் பெருஞ் சிறப்புடைத்தாம்.

அஃதெவ்வாறெனின்?—சீகண்ட பரமேசுரர், நந்தியம்பெருமானுக்கு அருளிச்செய்தார். அவர் சனற்குமார முனிவருக்கு அருளிச்செய்தார். அவர் சத்திய ஞான தரிசிகளுக்கு அருளிச்செய்தார். அவர் பரஞ்சோதி முனிவருக்கு அருளிச்செய்தார். அவர் நந்தமிழ் நாடு செய் நற்றவத்தினால் திருவருளுருப்பெற்றுத் திருவெண்ணெய் நல்லூரில் அவதரித்தருளிய மெய்கண்ட தேவருக்கு அருளிச்செய்தார். இம்மெய்கண்டார், சைவத்துறை விளங்க வந்த ஞானசம்பந்தப் பெருமானார் போன்று சைவசமயத்துறை விளங்க வந்த தனிப் பெருந்தகையார் என்பது முதலான பெருஞ்சிறப்பு வாய்ந்தவர் என்பதை மெய்கண்டார் சரித்திர நூலிற் காண்க.

இதை, வடமொழியிலேற்றிச் சிறப்புக்கூறிய வல்லார் கருத்து, வடமொழியே சிறப்புடைத்தென்று வழங்கி வந்த கால வேற்றுமையின்பாற் பட்டதென்றுணர்க. வடமொழியிலுள்ள சிவஞான போதமென்னும் பெயரிய பன்னிரு அநுட்டுப் சந்த வடமொழி விருத்தங்களைச் சூத்திரங்களென்று உபசரித்துக் கூறியதொன்று கொண்டே இவ்வாறு யூகித்தற் கிடமுண்டென்பதை ஆராய்ந்து கொள்க. வல்லார் வகுத்த வாய்க்கால் வழக்குக்கு இழுக்குமில்லை.

யாம் வடமொழி தென்மொழிகளை ஒருவாறுணர்ந்து தென்றமிழ் மொழியில் வேதமியற்றியுள்ளோ மாதலின் இருவகைகளையும் இனிதாராய்ந்து கூறியுள்ளோம். மதப்பேய கொண்டு மதிமயங்குவார்க்கு மந்திரமில்லை.

ஈண்டு, தமிழில் எண்ணிறந்த மெய்கண்ட சாத்திர விரிவு நூல்கள் இருப்பினும் பொதுமக்கட்கு அவை புலப்படல் அருமைத்தாமென்றெண்ணி இச்சிவஞான போதச் சூத்திரங்கட்குப் பாடிய முதலியவற்றைத் தழுவிப் பதவுரை குறிப்புரை மாத்திரம் எழுதி வெளியிட முன் வந்தனம்.

சிவனருள் தழைக.

வேதமொழிபெயர்ப்பாசிரியர்,

**காசிவாசி. சிவானந்த யதீந்திர சுவாமிகள்.**

உ

சிவமயம்

சிவானந்தக் குறிப்புடன் கூடிய

# சிவஞான போதசாரம்

---

## முதலாவது பொது வதிகாரம்

### பிரமாண வியல்

---

கடல்சூழுலகிற்குக் காரணமாகிய கடவுள் ஒருவர் உண்டென்பதில் பிரமாணங் கூறுகின்றது.

முதற் சூத்திரம்.

அவன் அவள் அது வெனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

[இ-ள்] அவன் அவள் அதுவெனும் அவை - அவனென்றும் அவளென்றும் அது வென்றும் சுட்டியறியப்படும் உலகத் தொகுதி, மூவினைமையின் - உதித்தல் நிலைத்தல் ஒடுங்கல என்னும் மூன்று தொழிலையுடைமையின், தோற்றிய திதியே - ஒரு முதல்வனால் உண்டாக்கப்பட்டு நிலைத்திருக்கின்றதேயாகும். ஒடுங்கி - அது தனது முதற்காரணத்தில் ஒடுங்கி, மீண்டும் உதிக்கும்போது ஒடுங்கிய அம்முதல்வனிலிருந்து, மலத்து - மலநீங்காமையின் மீண்டும் தோற்றும். (இவ்வாறுதலின் உலகம்) அந்தம் - உலகனைத்தையும் அழிக்கின்ற முழுமுதற் கடவுளையே, ஆதி - முதற்காரணமாகக் கொண்டதாம், என்மனார் புலவர் - என்று கூறுவர் பிரமாண நூல்களைக் கற்றுணர்ந்த பெரியார் என்றவாறு.

குறிப்பு:—ஈண்டு உலகம், தோன்றி நின்று அழிதலாகிய முத்தொழிலையுடையது, அவயவப்பகுப்பு, சடத்தன்மை, சுட்டியறியப்படல் என்பவற்றை உடைமையின், ஆடைபோன்றது, என்பன அநுமானமாம்.

இதனால், உலகம் காரியம் அதாவது ஆக்கப்படு பொருள் என்பது பெறப்பட்டது. இதுபற்றியே அழிதற் றன்மையுடைய மயக்கப்பொருளாம் என்றவாறுமாயிற்று.

அற்றாகலினன்றே,

"நிலநீர் தீவளி விசும்போ டைந்துங்
கலந்த மயக்க முலகம்"

என்று, ஒல்காப்புகழ் பெற்ற தொல்காப்பியமும்,

"அசத்தாஞ் சுட்டி யுணர் பொருளான வெல்லாம்"

எனவும்,

"அறிவினாலறிந்த யாவும் அசத்தாதலறிதி"

எனவும், தெய்வத் திருமறைகளுங் கூறுகின்றன.

ஈண்டு அசத்து என்றது காரணமாய்க் கிடந்தபோது இன்மையின் என்க. எனவே சற்காரிய வாதத்திற்கு முரணின்றாம். இவ்வாறே 'தோற்றிய திதியே', என்பதற்கும் முரணின்மை யுணரற்பாலதாம்.

இவ்வாற்றால், உலகம், ஒரு கருத்தனை யுடையது, காரியமாதலின், குடம்போல் என்னும் அநுமானம் உறுதிப் பட்டதென்க. அக்கருத்தனும், உபாதானத்தை புலப்படக் காணும் அறிவு இச்சை செயல்களை யுடையவனாகவே யிருத்தல் வேண்டப்படுதலின் மும்மூர்த்திகளில் ஒருவராகாமல் முழுமுதற்கடவுளாகிய பரமேசுரனே கருத்தனுவன் என்பது உய்த்துணரற்பாலது. இதனால், சிற்றறிவையுடைய சீவனும், முற்றறிவையுடைய அநேக ஈசுரர்களும் காரணரல்லர் என்பதும் பெறப்பட்டமை காண்க. ஈண்டுச்சிற்றறிவை யுடைய சீவனுக்கு உலகத்தின் உபாதான காரணத்தின் புலப்பட்ட அறிவு முதலாயின இன்மையானும், அத்தகைய அறிவு முதலியவைகளையுடைய அநேக ஈசுரர்கள் கருத்தர்களாகுமிடத்துத் தம்முள் மாறுபட்டு, படைத்தன் முதலான தொழில்கள் இடர்ப்பட்டொழியு மாதலானும பொருந்தாமை காண்க.

இக்கருத்துக் கொண்டே

"படைத்தளித்தழிக்க மும்மூர்த்திகளாயினை" எனவும், "ஆதிபகவன் முதற்றேயுலகு"—எனவும் தெய்வத் திரு மறைகளும், காரணன் ஒருவனே யெனத் தெளிவாய்க்கூறி யருளுகின்றன.

ஈண்டு, "அந்தரத்தகில கோடி தாமூமல் நிலைநிற்றன்" முதலான திருவருட் செயல்களாலும், முதல்வன் உலகை ஆக்கிக்காத்தழிப்பன் என்பது கருதிக்கொள்ளக் கிடந்தமை காண்க.

கூறியவாற்றால், உலகம் அவயமுடையதாயினும் காரிய மன்று, காரியமாயினும், சடமாகிய காரணத்திற் றேன்றி யது, கருத்தன உளன் எனினும் அவன சீவனேயாவன், சிவனுமெனினும் பல ஈசுரர்கள் உளர் என்பன முதலான பல்வேறு வகைப்பட்ட மயக்கங்கள் ஒழிந்தமை காண்க.

இரண்டாஞ்சூத்திரம்
அவையே தானே யாய்இரு வினையில்
போக்கு வரவு புரிய ஆணையில்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

முதற்காரணனிடத்தில் ஒடுங்கிக் கிடந்த உலகம் மீள உண்டாகும் முறைமை கூறுகின்றது.

[ இ-ள் ] தானே - சங்காரகாரணனுகிய முதல்வனே, அவையேயாய்- உடலுயிர்போற் கலப்புறறிருத்தலின் அவ் வுலகத் தொகுதியேயாகி, ஆணையில்- ஆணையென்னுந் தனது சிற்சததியால்வரும், இருவினையில - இருவினைக ளைத் தழுவி, போக்குவரவு - ஒடுக்கம் தோற்றம என்ப வற்றை, புரிய - செய்யும் வண்ணம், நீக்கமின்றி - அச்சிற் சததியுடன் பிரிப்பில்லாமல், நிற்கும் - ஒற்றுமைப்பட்டு நிற்பன், அன்றே அசை, எ-று.

குறிப்பு:— 'அவையே தானேயாய்' என்பதனை இரட் டுற மொழிந்துகொண்டு, அம் முதல்வன், உலகமாயும் உலகின் வேறுயும் உடனுகவும் நிற்பன் எனப் பொருள் கொள்க. இதனுல், கலப்பினுல் உடலுயிர்போல் உலகமே

யாயும், பொருட்டன்மையால், கண்ணின் இரவிபோன்று உலகின் வேறாயும், கண்ணொளியின் ஆன்மபோதம் போன்று உலகின உடனுமாயும் அம்முதல்வன் நிற்பன் என்பது பொருளாயிற்று ஈண்டு, இறைவன், பொன்னும மணியும போல் அபேதமாகவும், இருளும் ஒளியும்போல் பேதமாகவும், சொல்லும் பொருளும் போல் பேதா பேத மாகவும் நிற்காமல், இம்மூவகையையுந் தன்னுட்கொண்டு, உடலுயிர் அறிவொளிகளைப் போன்று அத்துவிதமாக நிற்பன் என்பது குறிப்பாற் கூறியவாறாயிற்று. இதுவே சுத்தாத்துவிதத்தின் துணிபொருளாமென்பதும் உணரற்பாலதாம்,

அற்றாகவினன்றே,

"இரு நிலனாய்த் தீயாகி யெம்மடிக ணின்றவாறே"

"உலகேழெனத் திசைபத்தெனத் தானொருவனுமே பல வாகி நின்றவா"

"அறிவானுந் தானே யறிவிப்பான் றானே
யறிவா யறிகின்றான் றானே—யறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிபொழில்பா ராகாய
மப்பொருளுந் தானே யவன்."

"சராசரமனைத்தும் நின்னிடைத் தோன்றி நின்னிடை யொடுங்கும்"

என்று, அப்பன் திருத்தாண்டகம், அம்மைத்திரு வாக்கு, வாதவூரர் மாணிக்கவாக்கும் பிற தமிழ்த்திருமறை களுங் கூறுகின்றன.

'அன்றே', என்பதால், அநாதியாகவே உலகமும் முதல்வனும் இவ்வாறே இயைந்து நிற்கு மெனினுமமையும்.

ஈண்டு, சிற்சத்தி துணைக்காரணம், இருவினை மற்றொரு துணைக்காரணம், அநா முதற்காரணமென்பதும், இருவினைக்குப் பற்றுக்கோடு உண்டென்பதும், இருவினைகளுக்கேற்ப உயிர்கள் பல்வேறு வகைகளாய் விரியுமென்பதும கொள்ளக் கிடந்தமை காண்க.

ஈண்டு, உலகிற்குக் காரணமாந் தன்மையே முதல்வ னுக்குப் பொது வியல்பாகிய தடத்த விலக்கணமாயினமை காண்க. இலக்கணம் அசாதாரண தருமம். அதன் பயன் வேற்றுமையுணர்ச்சி.

காரணம், காரியத்திற்குமுன் நியதமாய் முன்னிருப் பது. காரியம், காரணத்தின்பின் றோன்றுவது.

ஈண்டுச் சிற்சத்தியால் போக்கு வரவு புரியும் என்ற தனல் இறைவன் சங்கற்ப மாத்திரத்தால் முத்தொழிலைச் செய்தலின் விகாரியாகான் என்பதை உய்த்துணர்க.

மற்றும், மாயையே முதற்காரணமாம், அதற்குத் தாரசமாய் விரவி நின்று அம்மாயையை அதிட்டித்தலின் முதல்வனும் முதற்காரணமென்பது உபசாரமேயன்றிச் சித்தாந்தமன்றென்பது தெரிந்து கோடற்பாலது.

மா யா, என்பதற்கு, மா - ஒடுங்கல், யா - தோன்றல் என்பது பொருளாமாதலின் தோற்ற வொடுக்கங்கட்குக் காரணமாய் நிற்றலின் மாயை முதற் காரணமாமென்பது அமையுமாறறிக. இதனல், அத்துவிதம் என்னுஞ் சொல், 'இரண்டு அலாதது' என்னும் பொருளைத் தந்து நின்றது என்பதே சித்தாந்த நூற்றுணி பென்பது பெறப்பட்டமை காண்க.

இக்கருத்தை,

"..............................வலியாணை தாங்கி
மூவண்ணறன் சந்நிதி முத்தொழில் செய்ய"
என்றற் றொடக்கத்துத் தமிழ் நூல்களும்,

"காரணமும், காரணங்களைப் படைத்தோரும் கருதி னேருமாகியவர் உற்பவித்தலின்று" என்றற் றொடக்கத்து அதர்வசிகை முதலான வடமொழி மறை முடிவுகளிலுங் கண்டுகொள்க.

ஈண்டு, முதற்காரணனுகிய முழுமுதற் கடவுள், தன் வயத்தனுதல், தூய வுடம்பினனுதல், இயற்கையுணர்வின

ஞுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, வரம்பிலின்பமுடைமை, முடிவிலாற்றலுடைமை என்னும் எண்குண முடையவன் என்பதும் குணதீதன் என்பது உயிரின் குணங்கட்கு அதீதன் என்பதும் கருத்தென்க. இன்றெனின் உலகிற்குக் காரணமாந் தன்மையும் இல்லாதாய் விடுமென்க.

மூன்றாஞ்சூத்திரம்

உளது இலதென்றலின் எனதுட லென்றலின்
ஐம்புலன் ஒடுக்க மறிதலின் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த வுணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

மூவகையுடம்பிலுள்ள ஐங்கோசங்கட்கும் வேறாய், அறிவாகிய ஆன்மா என்பது ஒன்று உண்டெனச் சாதிக்கின்றது.

[இ-ள்] இலது - ஆன்மா இல்லை, என்றலின் - என்றுணர்ந்து சொல்வது ஒன்று இருத்தலானும், எனது உடல் - இது என்னுடைய உடம்பு, என்றலின் - என்று தன்னின் வேறாய் வழங்கலானும், ஐம்புலன் - ஐந்து விஷயங்களையும், ஒடுக்கம் - ஐம்புலன் ஒடுங்கிய கனவுப் பொருள்களையும், அறிதலின் - அறிவதாலும், கண்படில் - துயின்றவிடத்து, உண்டி - அநுபவமும், வினை - உடம்பு அசைதன் முதலான செயல்களும், இன்மையின் - இல்லாதிருத்தலானும், [கேவலாவத்தையில் ஒன்றையுமுணராதிருந்து] உணர்த்த - கருவிகரணங்களுடன் கூடியபின்னர் அறிவிக்கும்போது, உணர்தலின் - அறிந்து அநுபவித்துக் கொண்டு வருதலானும, மாயா இயந்திர - மாயா காரியங்களால் ஆக்கப்பட்டு நடிக்கின்ற, தநுவினுள் - உடம்பின் கண்ணே, ஆன்மா உளது - ஆன்மா என்பது ஒரு பொருள் உண்டு, எ-று.

குறிப்பு:— மற்றவைகளை, இவை ஆன்மா அல்லவென்று ஒதுக்கிவிட்டு, ஆன்மாவே இல்லையெனக் கூறுவது ஒன்றிருத்தலின் அதுவே ஆன்மாவாதலின் அது சூனிய

மாகாதென்பது உணரற்பாலது. மற்றும், யான், கரியன், பெரியன், சிறியன் என்பது போலாது, யான் உடம்பு, யான் கை, யான் கால், என யாண்டும் வழங்கல் காணப் படாமையின் ஆன்மா உடம்பின் வேருகும்.

இந்திரியங்களுள், ஒன்றேனும், ஐந்து விஷயங்களையும் ஒருங்கே உணரமாட்டா, அங்ஙனம் உணர்வது ஒன்றிருத் தலின் அதுவே ஆன்மாவாம்.

'யான் கனவு கண்டேன், எனக் கனவுப் பொருளை யுணர்ந்து கூறுதலின் அது ஆன்மாவாம்.

உடம்பு அசையாமலும், இன்ப துன்ப நுகர்ச்சியில்லா மலுமிருந்தும், ஓடுகின்ற பிராணனுக்கு அறிவு இன்மை யால ஆன்மா பிராணனிலும் வேருமென்க.

கருவிகரணங்கள் ஒன்றுமின்றித் தனித்து நிற்கும் நிலைமையில் உணராதிருந்து, கருவிகரணங்கள் சேர்ந்த பொழுது அறிவிக்க, அறிதலின், விஞ்ஞானத்திலும் ஆன்மா வேருமென்க.

இவ்வுடம்பு, தலை, கால், கை, வயிறு, கண் என்பன முதலாக ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெயரையுடைய தாகவே வழங்கப் படுதலின் நிலையாமையை யுடைய இவ் வுடம்பின் வேருய் நிலையுடைய ஆன்மா ஒன்று உண்டென்ப தாம்.

ஈண்டு, 'ஆன்மா—உளது', என்று பூட்டுவிற்கோற் பொருள் கொள்க. ஆன்மா உளது என்பது துணிபொருள் மற்றைய ஆறும் ஏதுக்கள். இதனல், சூனியவாதி, இந்திரி யான்மவாதி, விக்ஞானன்மவாதி முதலாயினேரை மறுத்து இவற்றின் வேருய், ஒரு ஆன்மா உண்டெனச் சாதித்த வாருயிற்று.

பிரமாணவியல்

முற்றும்.

## இலக்கண வியல்

நான்காஞ்சூத்திரம்

அந்தக்கரண மவற்றின் ஒன்றன்று அவை
சந்தித்தது ஆன்மாச் சகசமலத்து உணராது
அமைச்சரசேய்ப்பநின்று ஐஞ்சவத் தைத்தே.

மேலைச் சூத்திரத்தில் உள்ளதெனப் பெற்ற ஆன்மாவிற்கு இலக்கணங் கூறுகின்றது.

[இ-ள்] ஆன்மா - சீவான்மா, அந்தக்கரணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும், அவற்றின் - உட்கருவிகள் நான்கனுள், ஒன்று அன்று - ஒன்றேனும் ஆகமாட்டா, அங்ஙனமாயினும், அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று - சூழ்ச்சித்துணைவராகிய மந்திரியுடன் கூடி நின்று அரசியன் முறைமையைச் செலுத்தும் மன்னன் போன்று, சகசமலத்து - உடன்றோன்றிய ஆணவமலத்தால், உணராது - பொதுவுணர்ச்சி யிருப்பினும் சிறப்புவகையாலுணரமாட்டாது; ஆதலின், அவை சந்தித்தது - நுண்ணுணர்வைப் பெறுவதற்குத் துணைக்காரணங்களான அவ்வந்தக் கரணங்களுடன் கூடி நின்றது, அங்ஙனங் கூடி நின்று, ஐஞ்சு அவத்தைத்து - நனவு முதலான ஐந்து அவத்தைகளை யுடைத்தாம், எ-று. ஏ ஈற்றசை.

குறிப்பு:— ஆன்மவொளியானது அருக்கனொளி போன்று பொதுவகையாக யாண்டும் இருப்பினும், இது குடம், இது படம் என்பது முதலான சிறப்புணர்ச்சிகளை விளைவிக்காது, மற்றோர் சூரியகாந்தக்கல்லிற்பட்ட இரவியொளிபோன்று அந்தக் காரணங்களுடன் சேருங்கால் வரைவு பட்டதாய் அந்தக்கரணம் விருத்தியாகி ஐம்பொறி வழியாற் புறஞ்செல்லுங்கால் கலந்து சென்று விருத்தி

விடயத்துடன் விடயவடிவாய் நின்றுழி ஆன்ம வொளி இதுவெனச் சுட்டி யறியுமென்பதாம்.

ஈண்டு, "அந்தக்கரண விருத்தியடங்கிய போது அறிகின்றோனாகிய திருஷ்டா தனது வடிவில் இனிது நிலைப்பன், மனோவிருத்தி வெளிப்போந்த போது விடய வடிவு போலாகின்றான்" என்று பதஞ்சலியார் கூறியதையும் உற்று நோக்கிக்கொள்க. இதனால், தீயானது பொதுவாய் எங்குமிருப்பதாயாயினும் தீக்கடைக்கோல் கொண்டு முழுக வாங்கிக் கடையும்போது வெளிப்பட்ட சிறப்பு வகைத்தீயே, இருள் நீக்கலாகிய காரியத்தைச் செய்யுமாறு, அந்தக்கரணத்துடன் கூடிநின்ற ஆன்மாவே, சீவனெனப்பட்டு ஐந்தவத்தைகளையடையும் என்பது குறிப்பா யுணர்த்தியதாமென்க. இவ்வாறு ஐந்தவத்தைப்படுத்தலும் முத்தியை யடைவிக்கும் இரக்கத்தாலென்றுணர்க.

இதுவே தடத்த விலக்கண மெனப்படும். தடத்தம் இலக்கியத்தின் ஒரு புடையிருப்பதாய் வேறு படுப்பது.

ஈண்டு, அந்தக்கரணம் மந்திரி, வாயில் காப்பாளர், ஒற்றுவர், தூதர், அத்தானிகர், புரோகிதர் ஐவரும் ஞானேந்திரியங்கள். யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை, சேனாதிபர் ஐவருங் கன்மேந்திரியங்கள். ஒலி, வாக்கு முதலான விடயங்கள் பத்தும் ஏவலாட்கள். பிராண முதலான வாயுக்கள் சுற்றத்தார். ஆன்மா மன்னன் என்பது, உணரற்பாலது.

இதனால், சார்ந்ததன் வண்ணமாய் நிற்குந் தன்மையது, சதசத்து, அந்தக்கரணத்தில் வரைவுபட்டது என்பது முதலாகப் பல்வேறு வகையாய் ஆன்ம வியல்பைக் கொள்ளுதற்கு இடமுண்டென்பதை யுணர்க.

மற்றும், யான் இறையுணர்ந்தேன் என்று அந்தக்கரண மும் ஆன்மாவும், காய்ச்சிய இரும்புத்துண்டென ஒன்று பற்றி நின்று ஒன்றை மற்றொன்று யுணர்வதற்கு இடமாய் நிற்கின்றதென்க.

ஐந்தாஞ்சூத்திரம்

விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு
அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்
தாம் தமுணர் வின் தமியருள்
காந்தங் கண்ட பாசாசத் தவையே.

முதல்வன் உயிர்களிடத்துச் செய்தருளும் தலைமை யுபகாரத்தை யுணர்த்துகின்றது.

[இ-ள்] விளம்பிய - முன்னர்க்கூறிய, உள்ளத்து - ஆன்மாவினாலே, மெய் வாய் கண் மூக்கு (செவி) - ஐம் பொறிகளும், அளந்தறிந்து - தத்தம் விடயங்களை இஃது இன்னதென்று அளவிட்டு அறிந்தும், அறியா - அங்ஙன மறியுந்தம்மையும், தம்மைச் செலுத்தும் ஆன்மாவையும் அறியமாட்டா, ஆங்கு அவை போல - அவ்வண்ணமறியாத அவ்விந்திரியங்களைப் போலவே, தாம் - ஆன்மாக்களும், தம் உணர்வின் - தமது அறிவை விளக்குவதாகிய, தமி - முதல்வனது, அருள் - திரோதான சத்தியால், தம்மையும் தமது அறிவை விளக்குந் திருவருளையும் அறியமாட்டா. அவையே - ஆன்மாக்கள் அவ்வாறுணர்தலோ, காந்தங் கண்டபசாசத்து - காந்தம் முன்னிலையிலுள்ள இரும்பை வலித்துக்கொள்வதுபோல முதல்வனது சந்நிதிமாத்திரத் தாலாம், எ-று.

குறிப்பு:—ஈண்டு ஐம்பொறிகளைக் கூறியது உபலக் கணமாமாதலின் ஏனைக்கருவிகளும் ஆன்மாவை யதிட்டித்து நின்றே, அறிவனவும், செய்வனவுமாகின்றன என்ப

துணர்க. ஆன்மாவையன்றி கருவிகரணங்கள் எவ்வாற்ற னுஞ் செல்லாமையா மென்க.

ஈண்டு ஆன்மா என்றது உள்ளத்தின் மேற்று ஆன்மாவினுடன் கலந்து நின்ற வுள்ளமே இந்திரியங்கட்கு இறைவனுதவி னென்க. "அவை சந்தித்தது ஆன்மா" எனக்கூறியதும் இக்கருத்தை பற்றியாம் என்க.

ஈண்டு, ஆன்மாவுடன் உள்ளமும், உள்ளத்துடன் ஆன்மாவும் கூடாவிடின் உணர்ச்சிக்கிடமாதல் அமையாதென்பது உணரற்பாலது.

ஈண்டு, அந்தக்கரணம் சித்தின் சேர்க்கையால் சித்தெனப்படினும், மாறுதலின்றிய சித்தாகாதென்க. மற்றும், ஆன்மாவுடன் சித்தொளி கூடிய வழி, அவ்வான்மா அந்தக்கரணத்துடன், அந்தக்கரணம் இந்திரியத்துடனும், இந்திரியம் விடயத்துடனுஞ்சம்பந்தப்படுங்கால், அறிவு நிகழ்கின்றது. இதை வலியுறுத்துவது, "இதை யான் உணர்ந்தேன்" அல்லது "இதன் விடயக உணர்வுடையான் யான்" என்னும் நினைவேயாம்.

சந்நிதி மாத்திரையானே அனைத்தையுஞ் செலுத்தலின், முதல்வன் விகாரப்படான். இதனுல், முதல்வன் தனது சத்திய சங்கற்பத்தால் எல்லாஞ் செய வல்லான் என்பது கொள்ளக் கிடந்தமை காண்க.

ஆறஞ்சூத்திரம்

உணருருவு அசத்தெனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்கு மன்னுலகே'

முதல்வனுடை சிறப்பியல்பு என்னும் சொரூப விலக்கணங் கூறப்படுகின்றது.






[இ-ள்] அறிவுக்கறிவாய் நிற்கு முதல்வன், உணர் உருவு எனின் - அளந்தறியப்படும் இயல்புடையதா மெனி னே, அசத்து-உலகம்போல் நிலையில்லாததாம், உணராது- எவ்வாற்றானும் அறியப்படாத இயல்புடையதா மெனினே, இன்மையின் - முயற்கொம்பென சூனியப்பொருளாம், ஆக லான், இருதிறன் அல்லது - இவ்விரு வகையுமின்றி இரு வகையின் -அறியப்படுவதும் அறியப்படாததுமாகிய இயல் புடையது, சிவசத்து ஆம்என - பரசிவனது உண்மைச் சொரூபமாம் என்று, மன்னுலகு இசைக்கும் - மெய்புணர் வில் நிலைபெற்று உயர்ந்தோர் கூறுவர், எ-று. ஏ-ஈற்றசை.

குறிப்பு:—மன்னுலகே இசைக்கும் எனையோர் அறி யார் எனினுமாம்.

அசத்தென்பது, முழுதும் இல் பொருளாமாயினும், ஈண்டு நிலைப்பொருள் போலத் தோன்றி நின்று அழியும் பொருண்மேனின்றது. அசித்தென்பதும் இதன்பாற்படும். இதனால், சுட்டியறியப்படும் பொருளனைத்தும், சடமாய், பொய்ப் பொருள்களே யாமென்பது உணரற்பாலது. அற்றாகலினன்றே

"அறிவினா லறிந்த யாவும் அசத்தாத லறிதி"

என்று கூறுகின்றது புடைநூலும்.

ஈண்டு, காரியப்படுங்கால், தூலமாய்ச் சுட்டியறியப் பட்டு, விரைவில் மறைந்து தனது காரணத்தில் சூக்கும மாய் விளங்காது அசத்தாய் நிற்றலின், காரியப்பிரபஞ்சம் அசத்தெனப்பட்டது. இதனால், சற்காரிய வாதத்திற்கு இழுக்கின்மை காண்க.

யாண்டும் எவ்வாற்றானும் சுட்டுணர்விற்கு விடயமாகா மையின், முயற்றலையிலுள்ள கொம்பும், மலடி பெற்ற

மகனும் இத்தகைய பிறவனைத்தும் சூனியப்பொருள்களே யாம். தனித்தனியே மலடியும் மகனும், முயலும் கொம்பும், அறியப்படலின் விசேடித்ததென்க.

பாசஞான பசுஞானங்களாலறியப்படாமையின் ஒருவாற்றாலறியப்படாமையும், பதிஞான மொன்றானே அறிடப்படுதலின் ஒருவகையாலறியப்படுதலும், சிவ உண்மைச் சொரூபத்திற் பெறப்பட்டமைதல் காண்க. இதனால், மாற்ற மனங்கழிய நின்ற சிவத்தை, அநுபவ வுணர்வால் தானாய்க் காண்டலே அறிந்துமறியாமையாம் என்பதுங் கொள்ளக்கிடந்தமை காண்க.

இதுபற்றியே,

"தன்னாலே தனையறிந்தாற் றன்னையுந் தானே காணும்" என்று கூறுகின்றது உண்மை நூலும்.

மற்றும், "ஆன்மாவின் உண்மையுணர்ந்தவர் தமையுணர்ந் தோர் தருமிது பசுஞானம்"

என்று, சிவஞானத்தை வேறு பிரித்துக் கூறியதற் கும் இதுவே கருத்தாம்.

"சிவோகம் பாவிக்குமத்தாற் சிவனுமாவர்" என்பதை யும் ஈண்டு நோக்குக. "பாவனைபிறந்து நின்று பாவிக்கப் படுவதாகும்" என்பது மிது. இவ்வாற்றால் அறிந்து மறியப் படாமையே சிவஞ் சத்து என்னும் முதல்வனுடைய சிறப்பியல்பு என்பது உணரற்பாலது.

"உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே" என்பதுமிக்கருத்தேயாம்.

இலக்கணவியல் முற்றும்.

# இரண்டாவது உண்மை அதிகாரம்

சாதனவியல்

ஏழாஞ்சூத்திரம்




யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்
சத்தே யறியாது அசத்துஇலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா.

சத்த சத்துக்களை வரையறுத்து ஆன்மாவிற்குச் சிறப்பியல்பு கூறி, அதிகாரிஇலக்கணத்தைக் குறிப்பாற் கூறுகின்றது.

[இ-ள்] சத்து எதிர் - முன்னர்க்கூறிய சிவசத்தின் முன்னிலையிலுள்ள, யாவையும் - சுட்டியறியப்படும் அசத்துக்களனைத்தும், சூனியம் ஆகலின் - விளங்காமையின் பாழாமாகலான், சத்தே - சன்மாத்திரமேயாகிய சிவம், அறியாது - இது ஒருபொருளாமெனச் சுட்டி உணரமாட்டாது, (அறிவுக்கு விடயமேயின்மையி னென்க. இவ்வாறே) அசத்து - சடமாய் அழியுந் தன்மைத்தாயவுலகும், இலது - தான் அசத்தாயிருக்குந் தன்மைத்தாமாதலின், அறியாது - சத்தாயுள்ள சிவத்தை அறியமாட்டாது, (பரிசேடத்தால்) இருதிறன் - இருவகையையும், அறிவு உளது - அறிந்து நிற்கும் அறிவு ஒன்று உளதெனப் பெறப் படுதலின், அதுவே, இரண்டு அலா - சத்தும் அசத்துமல்லாத, அதாவது சதசத்தாகிய, ஆன்மா - ஆன்மாவாம். எ-று.

குறிப்பு:—சிவம் அறிவுமயம், உலகம் அறியாமைமயம், இதுவே சித்து, அசித்து, சத்து அசத்து எனப்படுவது. நித்தியமென்றும் அநித்தியமென்றும் வாதமிடுவதும் இதுவேயாம். ஈண்டு, முற்றுணர்விற்கு விடயமாதலின்றி விளக்கமின்மைகொண்டு அநித்தியமென்றதென்க.

ஈண்டு, இரவியினொளியில் விண்மீனொளி மழுங்கிச் சூனியமாய் நிற்பது போன்று, சிவ வொளியில் உலகம் விளக்கமில்லாது பாழ்போலாதலின் சூனியமெனப்பட்டது. யாண்டு மில்லாத சூனியமாமெனின் காரணச் செயலால் தூலமாய் வெளிப்பட்ட போதும் அறியப்படாது முழுது மின்மையதா யொழியு மென்க.

காணப்படும் இத்தூலப் பிரபஞ்சம் சடமாதல் கண் கூடாமாதலின், ஈண்டு அறிவில்லாததென்று சாதிப்பது தத்துவ வுலகேயாம்.

இரவியையும், விடயங்களையும், அறிந்தநுபவிக்குங் கண்ணைப்போல், பதியையும் பாசத்தையும் அறிந்தனுப விப்பது, சதசத்தாகிய ஆன்மாவாம் என்பது திரண்ட பொருள்.

ஈண்டு, சத்து, அசத்துஎனப்படும், இருவகைப் பொரு ளும் பிரமேயம். அதாவது அளவையா லளந்தறியப்படு பொருள். அவற்றையறிகின்ற சதசத்தாகிய பொருள் அதா வது சீவான்மா, பிரமாதாவாவன் ஆகவே அறிகின்றவன் சீவான்மா என்க. ஆன்ம அறிவாகிய சிற்சத்தியே அதா வது உண்மையுணர்வே பிரமாணமாம். (அளவையாம்)

இதனல், பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளும் கடல் நீர் உப்புப்போல வியாபக வியாப்பியங்களா யிருப்பன என்பதுணர்க.

ஈண்டு, சதசத்தாந்தன்மையே ஆன்மாவிற்குப் பொது வியல் பென்னுஞ் சொரூப விலக்கண மென்றவாறு மாயிற் றென்க.

எட்டாஞ்சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே.

சிவ ஞானத்தையும் பயன்களையும் உணருமாறு உணர்த்துகின்றது.

[இ-ள்] தவத்தினில் - முன்னர்ச் செய்துள்ள சிவ புண்ணிய மிகுதியால், தம்முதல் - தனக்கு உயிர்க்குயிராய் நின்று இதுகாறும் உணர்வைத் தந்து கொண்டிருந்த இறைவனே, குருவுமாய் - இப்பொழுது ஞானசாரியனாகவும் எழுந்தருளிவந்து சிவ தீக்கை செய்து, மன்னவ குமாரனாகிய நீ, ஐம்புல - ஐம்பொறிகளென்னும், வேடரின் - வேடர்களுடன் சேர்ந்து, வளர்ந்து - வாழ்ந்திருந்து, அயர்ந்தனை - நினது பெருந்தகைமையை மறந்துவிட்டனை, என - என்று, உணர்த்த - நின் பெருந்தகைமை இத்தன்மைத்தாம் என்று அறிவுறுத்தியவுடன், விட்டு - அவ்வேடர்களின் தொடர்பை யொழித்து, அன்னியமின்மையின் - அம்முதல், தன்னுள், தயிரில் நெய் போல் ஒன்றுபட்டேயிருத்தலின், அரன்கழல் - அத்தகைய சிவனுடைய சீர்பாதங்களை, செலும் - அணையும் எ-று. ஏ-அசை

குறிப்பு:— தம்மையும், தமது முதலையும் அறியாது, விடயங்களைக் கவருந் தொழிலை மாத்திரமேற்கொண்டு, ஆன்மாவை இடர்ப்படுமாறு செய்தலின் இந்திரியங்கள் வேடர்க்குவமையாயின.

உலகிற்கொரு முதற்காரணமாந்தன்மையாகிய வெண்கொற்றக் குடையையும், அனைத்தையும் ஏவுதலாகிய சிங்காதனத்தையும், முற்றறிவாகிய முடியையும் உடையவனாய்ப்

பாசத்தை அரித்தலாகிய தொழிலுடைமையின் அரன், என்னுந் திருநாமத்தையுடைய முதல்வன் அரசனுக்குவமையாயினன்.

இறைவனது பேரானந்தப் பெருஞ் செல்வத்தைத் தன்னதேயாகக் கொண்டு அநுபவிக்கும் சுதந்திரமுடையதாதலின் ஆன்மா (சீவன்) மன்னவ குமாரனுக்கு உவமையாயினன்.

ஒரு பிறவியிற்செய்த தவம், சாலாதென்றலால் முன்னர்ச்செய்த தவமெனப்பட்டது. தவத்தானன்றிச் சிவஞானம் எய்தற்கரிதாமென்க. எனவே, தவமிருப்பினும் ஆசிரியரின் அருளின்றி மெய்யுணர்வு நிகழ்தல் அமையாதென்க. எனவே, மெய்யுணர்வாலன்றி சிவன்கழலைச்சேறல் முடியாதா மென்றுணர்க.

பாசநீக்கம், பதிஞானம், திருவடிப்பேறு என்பன முறையாய் காரண காரியங்களாய் நிற்கின்றன.

தன்பெருந் தகைமையை யுணர்வது, பாசநீங்கி, பரிபக்குவம் வந்து ஆன்மசுத்தி யாதலாம். என்னை? சுத்தான்மாவே சிவத்துடன் சேரும் தன்மையதாதலின் என்க.

தீக்கை என்பது மலத்தைப் போக்கி ஞானத்தையளிப்பதாம்.

ஈண்டு, பயன் இருவகைத்தாம். ஒன்று பாசநீக்கம். மற்றொன்று பதிப்பேறு.

இது மேற்கூறப்படும் பயன்களுக்குத் தோற்றுவாய் கூறப்பட்டதாகும்.

ஒன்பதாஞ்சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினில் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவ
தண்ணிழலாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்தே.

சிவ தரிசனத்தினுல் உண்டாகும் ஆன்மசுத்தியாமாறு உணர்த்துகின்றது.

[இ-ள்] ஊனக்கண் - சிற்றறிவாகிய பசு ஞானத்தானும், பாசம் - அறியாமை மலிந்த பாச ஞானத்தானும், உணரா - அறிய வொண்ணுத, பதியை - பரமேசுரனை, ஞானக்கண்ணினில் - அவனது திருவடி ஞானத்தால், சிந்தை - தனது உள்ளத்தில். நாடி - தேடிக் கண்டு கொள்க. அதனுல், பாசம் - [illegible]கிய பாசக் கூட்டம், உராத்துனே - விரைவாய்ப் பறந்து செல்கிற, தேர்த்தென - பேய்த் தேரைப் (கானல்நீரைப்) போன்று, ஒருவ - நீங்கியவிடத்து, பதி - பதிஞானமானது பிறவித் துன்பமாகிய வெப்பத்துக்கு, தண் நிழல் ஆம் - குளிர்ந்த நிழல் போன்று விளங்கும், (ஆண்டு பாசநீங்கி, ஞானம் வாய்ந்து, ஞேயத்தை உள்ளவாறுணரும் காட்சி ஞானம் சலியாதிருக்குமாறு செய்யும்) அஞ்செழுத்தே - திருவஞ்செழுத்து (பஞ்சாக்கரம்) விதி - உச்சரிக்கும் விதியை யறிந்து, எண்ணும் - மானதமாய்த் தியானிக்கப் பெறும், எ-று.



குறிப்பு:—ஊனக் கண்ணிற்கு, சிவம் உள்ளவாறு வெளிப்படினும், கண்ணில் மஞ்சணிறமுடையான் வெண் சங்கையும் மஞ்சணிறமுடையதாகவே பார்ப்பதுபோன்று மனக்கோள்வடிவே தோன்றுமல்லது உள்ளவாறு நிகழா தென்க.

ஞானக்கண் கொண்டு காணு முணர்வானது, நிருவிகற்பம், இரட்டுறக் காணல், தெளியக்காண லென மூவகைத்தாம். இவை அதிபரிபக்குவ முடையார்க்கு உணர்த்திய மாத்திரத்தானே ஒருங்கே நிகழும். ஏனையோர்க்கு, கேட்டல், தெளிதல், சிந்தித்தல் வாயிலாக நிகழுமாதலின், அவர் பொருட்டு ஆன்மசுத்தி ஒருதலையாக வேண்டப்படுமென்க.

ஈண்டு, ஞானக்கண்ணால் நாடுதல் அத்துவிதமாயுணர்தல், ஞானத்தால் பாசமோருவும் என்றமையின், அஞ்ஞானத்தால் வந்த பாசம் மயக்கமா மென்பதும், பாசம் என்பது அநாதியாமாயினும் நித்தியமல்ல வென்பதூம், பசுவாய்க் கட்டுப்படுத்தலின் பாசமெனப்பட்ட தென்பதும் உணரற்பாலன.

ஆன்ம சுத்தியாவது பாசம் நீங்கலாம். பணியை நீத்தலென்பது மேல்வரும்.

ஆன்ம தரிசனஞ்செய்த சகலன் (மந்தாதிகாரி) வாதனை வயத்தால், பாசத் தொடர்புடையானுதலுங் கூடுமாதலின் அஞ்செழுத்தைத் தியானிக்குமாறு அறிவித்த தென்க.

ஈண்டு, சொல்லும் பொருளும், வாச்சிய வாசகமாய் நிற்கும் இயைபு ஞானமுமின்றி நிருவிகற்பமாய் எழும் அஞ்சு அக்கரப்பொருளாகிய பரசிவ பாவனையாம்.

தண்ணிழல், வெப்பத்தைப்போக்கி இன்பத்தை ஈதலின் பதிஞானத்திற்கு உவமையாயிற்று. பதிஞானமும், பவ வெப்பைப்போக்கிப் பதியின்பை உள்ளவாறு பயத்தலின் அமையுமாறுணர்க.

'எண்ணும் அஞ்செழுத்தே' என்றதால், சிவ, பரமேசுர! நம:, யான் பந்தத்திலிருந்து விடுபட்டவன் ஆதலின், அய - உன்னுடன் ஒன்றுமாறு செய்தருளுவாயாக என்னும்

பயன் வடிவாகிய சிந்தனையே கூறப்பட்டதென் றுணர்தற்பாலது.

அடிஞானம், யான், எனது என்பது அறநின்ற மெய்யுணர்வாம்.

சாதன இயல் முற்றும்.

பத்தாஞ்சூத்திரம்

## பயனியல்

அவனே தானே யாகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.

பாச நீங்குதலும் பதியையடைதலுமாகிய ஞானத்தின் பயன்களுள் பாசம் ஒழியுமாறு உணர்த்துகின்றது.

[இ-ள்] அவனே - ஞானக் கண்ணாற்காணப்பட்ட அம்முதல்வனே, தானேயாய் நின்ற - உயிர்களாகவேயிருந்த, அந்நெறி - அத்தகைய பந்த நிலையைப்போன்று, ஏகனாகி - இம்முத்தி நிலையிலும் அம்முதல்வனோடு பிரிப்பற்று ஒன்றேயாகி, இறைபணி - அம்முதல்வனுக்குச் செய்யும் ஞானத்திருப்பணியின் கண், நிற்க - உறுதியாயிருக்குமிடத்து, மல மாயை தன்னொடு - மலம் மாயை என்னும் இரண்டனுடன், வல்வினை - வினையாகிய வலிய மலமும், இன்றே - இல்லாததாய் ஒழியும், எ-று.

குறிப்பு:— 'அவனே தானேயாகிய அந்நெறி என்றதனால்' முதல்வனும் உயிர்களும் ஒற்றுமைப்படல் பல்வேறு வகையாயிருத்தலின் அவையனைத்து சித்தாந்தத்திற்கு ஏலாமையின், தாடலைபோற் பிரிப்பின்றி நிற்கும் அத்துவித நிலையே கொள்ளக் கிடந்தது. தன் மனைக்கண் கிடந்த புதையல் அறியாமைக் காலத்தில் பேறாகாதது

போன்று அறியாமைக் காலத்திலுள்ள பொருணிறைவு பற்றிவரும் அத்துவிதக் கலப்பும் பயனுகாமை காண்க.

இதுவே சிவத்தின் முழு விளக்கமாகிய சிவானந்தானுபூதியிற்றிளைத்து நிற்கும் ஞான சமாதியாம்.

ஈண்டு ஒற்றுமைப்படுதலும், முதல்வனது அருள், உடனாய் நின்று அறிவித்து அறிகின்றது, அதனையதிட்டித்து நின்றேயாமுணர்கின்றனம் என்னும் அபேதமாயிருந்து உபசரிக்கும் முறையை யுணர்ந்து அன்புமிக்கெழ தனது அறிவிச்சை செயல்கள் ஒடுங்கி நிற்றலாம்.

இறைபணி, மெய்யுணர்வாற் செய்யும் சமாதி நிலையையே மேற்கொள்ளல்.

சிவஞானியே, சிவபத்தருட் சிறந்த பத்தனுவன். இவ்வாறு பயன் வடிவாகிய ஞானபத்தி நிலையில் நண்ணிநின்ற சீவன் முத்தனுக்கு, உடம்பொடு வாழ்ந்து கொண்டிருக்கும் நிலையிலும் முத்தி நிலையே தலைப்பட்டு நிற்குமென்க.

பதினேன்றஞ் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
க்காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல்செலுமே.

சிவனது திருவடியைப் பெற்று இன்புறுமாறு உணர்த்துகின்றது.

[இ-ள்] காணும் - காட்டிற் காணுகின்ற, கண்ணுக்கு- விழிக்கு, காட்டும் - அதனுடன் ஒன்ருயிருந்து உருவத்தைக்காட்டிக் காணுகின்ற, உளம்போல் - ஆன்மாவைப் போன்று, காண - அறிவிக்க அறியும், உள்ளத்தை - ஆன்மாவிற்கு விடயமாவதை, காட்டிக்காணலின் - உடனாய் நின்று அறிவித்துத் தானும் அறிதலின், அயரா அன்பின் - அத்துவிதமாய் நின்றருளும் பேருபகாரத்தை மறவாது

கடைப் பிடிக்கும் மெய்யன்பினுல், அரன் கழல் - அம் முதல்வனுடைய திருவடிப்பேரின்பத்தை அதுவாய் நின்று, அநுபவிக்கும் அநுபூதிக்கண், செலும் - இனிது தலைப்படு மென்க எ-று.

குறிப்பு:— கண் உருவத்தைக் காணுங்கால் இன்றி யமையாத ஆன்மவுணர்வு, வேற்றுமையின்றி அதாவது கண் கண்டதென்றும், உயிர் கண்டதென்றும் பகுக்க முடியாது அத்துவிதமாய் நிகழுமாறுபோல, ஆன்மா ஒரு விடயத்தை யறியுங்கால் அம்முதல்வனது சிற்சத்தியும் ஆன்ம சிற்சத்தியும் வேற்றுமையின்றி ஆன்மா அறிந்ததோ, அதனையதிட்டித்து நின்ற பரசிவனருள் அறிந்ததோ என்னும் வேறுபாடு காணப்படாமல் அத்துவிதமாய் நின்று செய்தருளும் பேருபகாரத்தை நினைந்து நினைந்து அன்பு மீதூர ஆண்டு நிகழும் பேரானந்தத்தைக் காணாது கண்டு அநுபவிக்கும் அதீத நிலையாம், இது.

இக்கருத்தைக் கொண்டே தமிழ் மறையும்,

'நினையுமா நினையே, 'விரும்புமா விரும்பே, என்று முத்திநிலைபற்றி ஓதியிருக்கின்றதூஉமென்க.

சிவானந்தப் பேறுகிய முத்திநிலைக்கண் ஆனந்தத்தை யறிந்து அநுபவித்தல் அமையுமாதலின் திரிபுடியுண்டென்க. ஆனால், பந்தத்திற்குக் காரணமாகிய முப்பொருளைப் போன்று இவை மும்முதல், என்னும் பாகுபாடின்றி அடங்கி நிற்றலின் ஈண்டு முரணுமை காண்க.

வீடு, என்று மொழிதல் கொண்டே முப்பொருள் உண்மைதானே பெறப்படுதலின், முப்பொருளு மில்லாத முத்தியென்பது ஒன்று வழக்கின்கண் வாராதென்றுணர்க.

சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத் தென்றது மிதுவே, மற்றும், அத்துவித மென்பதற்கு இன்மைப்

பொருள் கொள்ளல் சித்தாந்த மரபன்று மாதலின், அது, ஈண்டும் பொருத்தமின்மை காண்க. அவ்வாறு கூறியதும் உபசாரமாம். இதை, அரதத்தரின் உரமுறுத்தும் வாக்காற் றெளிந்து கொள்க.

பன்னிரண்டாஞ் சூத்திரம்

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.

சீவன்முத்தன், எண்ணுதற்கும் எட்டாத ஒரு பரசிவத்தை எண்ணுமெண்ணி, செய்யாமற் செய்யும் வழிபாட்டைக்கூறுகிறன்று.

[இ-ள்] அன்புருவாகிய சிவத்தைக்கண்ட சீவன் முத்தன் (சிவஞானி) செம்மலர் - சிவனது விரிந்த மலர் போன்ற நோன்றாள் - ஏற்றுக்கொண்டாலும் இறைவனது இணையடியை, சேரல் ஒட்டா - அடையவொட்டாது தடுக்கும், அம்மலம் - அத்தகைய மும்மல அழுக்கை, கழீஇ - திருவடிஞானத்தாற்றுலக்கி, அன்பரொடு - அவ்வாறு மலத்தைக் கழுவிய சிவஞானிகளுடன், மருவி - கூடிக்கலந்திருந்து, மாலற - பிறப்பிற்குக் காரணமாகிய பேதமை நீங்கப்பெற்று, நேயமலிந்தவர் - அன்புமீதூர அரன்பணி மேற்கொண்ட பெரியாரது, வேடமும் - சிவ வேடமும், ஆலயந்தானும் - சிவன் கோவிலும், அரனெனத் தொழுமே - சிவனாகவே கண்டு வழிபட்டு வாழுவன் எ-று.

குறிப்பு:— ஞான நிட்டை கூடியபின்னரும் யாதானும் ஒரு வழியால் நுழைந்து, மும்மலங்கள் ஞானநிட்டையைக் கலைத்தலைக்கு மென்னலுங் கூடுமாதலின், அதனுல் பண்டைய விபரீத வுணர்வு வளர்ந்து முத்தியின்மை நுகரத்

தடைப்படுதலும் உளதாமாதலின் அம்மலங்களை ஞான வுறைப்பாகிய நீரால் கழுவுதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

ஈண்டு, சீவன் முத்தர்களின் அறிவிச்சை செயல்கள், வியவகார காலத்தும் ஏனைய விடயங்களிற் செல்லமாட்டாவாகலின், ஆண்டுப் பழக்க வசத்தால்வழிபாடேமுன்னிற்பதோடு, செய்ந்நன்றி கொன்றது மாகாதாதலின், முயற்சியின்றிப் பிறர்க்குணர்த்து முறையுந்தழுவி, வழிபாட்டில் நிலைத்திருப்பனவாம் என்க.

சிவபத்தர்களான சிவஞானிகளைத் தவிர்ந்த ஏனையோர், பாசவுணர்ச்சிக்கு நிமித்தமாகிய வழக்கையே யுணர்த்துவராதலின் அன்பரோடு கூடுக வென்றதாம்.

பாலில் நெய்போல யாண்டும் நிறைந்திருத்தல், பரசிவனியற்கைத்தாமெனினும், சிவ வேடத்திலும், சிவன்கோவிலின்கண்ணும் தயிரின் நெய்போல இனிது விளங்கி நிற்றலின் அவற்றையே சிவனாக வழிபடுக வென்றதாம்,

இப்பொருளை உட்கிடையாக் கொண்டே,

தன்னை யறிவித்துத் தான்றனச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

என்று, வார்த்திக வெண்பாவும், சீவன்முத்தனுக்கு எவ்வாற்றானுஞ் சிவவழிபாடே பொருத்தமுடைத்தா மெனக் கூறுகின்றது.

பயனியல் முற்றும்.

சிவானந்தக் குறிப்புரை முற்றிற்று.

**சிவஞான போதசாரம் முடிந்தது.**